செய்யாமல் இருக்கின்ற காரணத்தினாலே இந்த கேஸ் ஒன்றும் இல்லாமல் போய்விட்டதாகக் கூறப்படுகிறதே, அது உண்மையா ?இம்மாதிரி கையாடல் செய்கின்றவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவில்லை யென்றால் அவர்களுக்கு ஊக்கம் அளிப்பதாக இருக்கும் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் அளித்த விடை கனம் அங்கத்தினர் காதில் விழவில்லை என்று நினைக்கிறேன். கிரிமினல் பிராசிகியூஷன் சாங்ஷன் ஆகியிருக்கிறது. கொஞ்சம் தாமதம் ஆவதற்கு காரணம் கணக்கு எல்லாம் வரவேண்டியிருந்தது. அக்கௌண்டண்ட் ஜெனரல் ஆபீசிலிருந்து தகவல் வரவேண்டியிருந்தது. அது வருவதிலே கொஞ்சம் காலதாமதம் ஆயிற்று. சம்பந்தப்பட்டவர்களிடம் எக்ஸ்பிளனேஷன் கேட்டு பிராசிகியூஷன் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த விஷயம் பரிசீலனையிலிருப்பதால் இன்னும் அதிகமாக தகவல் கொடுப்பது முறையல்ல.

*Central Jails*

*1298 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சிறைகளில் விவசாயத்திற்காக யந்திரங்களையும் அதற்கான கருவிகளையும் செய்வதற்கான தொழிற்சாலைகளை ஆரம்பிக்க உத்தேசமுண்டா ?

(இ) எந்தெந்த தொழிற்சாலைகள் எந்தெந்த சிறைகளில் எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :

(அ) No, Sir.

(இ) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : மத்தியச் சிறைச்சாலைகளிலே குறைந்தபட்சம் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் தண்டனை அடைந்தவர்களுக்கு ஒரு தொழில் நுட்ப பயிற்சி அவர்களுக்கு அளிக்க வேண்டியதாய் இருப்பதினால் விவசாயிகளுக்கு வேண்டிய இயந்திரங்களை தயார் செய்வதை முன்னிட்டாவது, ஒன்றிரண்டு மத்திய சிறைச்சாலைகளில் இது போன்ற தொழிற்சாலைகளை அமைப்பதற்கு ஏற்பாடு செய்வது நல்லது என்று கனம் அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ? இனிமேலாவது அந்த மாதிரி ஆரம்பிப்பதற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிறைச்சாலைகளில் தண்டனை அனுபவிப்பவர்களுக்கு தொழில் கற்றுக்கொடுக்க வேண்டியதன் நோக்கம், சிறையைவிட்டு வெளியே வந்த பிறகு அவர்கள் அந்தத் தொழிலிலே ஈடுபடவேண்டும் என்பதற்காகத்தான். அப்படிப் பார்க்கும் பொழுது, ஒரு குறிப்பிட்ட தொழிலிலே பயிற்சி பெறுகின்றவர்கள் அதை நடத்த முடியாமலிருக்கலாம். இப்பொழுது கீழ்க்கண்ட தொழில்கள் கற்றுக் கொடுக்கப்பட்டு வருகின்றன.

Tailoring, aluminium and blacksmithy work, spinning and weaving, boot making, carpentary, book-binding, handmade paper-making, composing in printing press, gardening, cooking, etc.

*Pamani-Kallimedu road.*

*1299 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி தாலுக்கா பாமணி-கள்ளிமேடு ரஸ்தா வுக்குக் கப்பி போடத் திட்டமுண்டா ?